உ
சிவமயம்
முருகப் பெருமான் துணை.

# தேவைப் பிள்ளைத் தமிழ்



அஷ்டாவதானம்
**சுப்பிரமணிய ஐயரவர்கள்**
இயற்றியது.

✸

தேவகோட்டை
திருவாளர்
**உ. மு. சுப. லெ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள்**
பொருளுதவியால் வெளியிடப் பெற்றது.

✸

**கந்தர் சஷ்டி விழாக் கழக வெளியீடு**
…ராதி ஆண்டு



உ

சிவமயம்

முருகப்பெருமான் துணை.

# தேவைப் பிள்ளைத் தமிழ்

அஷ்டாவதானம்

**சுப்பிரமணிய ஐயரவர்கள்**

இயற்றியது.







**தேவகோட்டை திருவாளர்**

**உ. மு. சுப. லெ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள்**

பொருளுதவியால் வெளியிடப் பெற்றது.



**கந்தர் சஷ்டி விழாக் கழக வெளியீடு**

குரோதி ஆண்டு

உ
சிவமயம்
பாலருவாயர் துணை.

# முன்னுரை.

தேவகோட்டை "பாலகவி" வயிநாகரம்

**வே. இராமநாதன் செட்டியார் (தத்புருஷ தேசிகர்) அவர்கள்**

"இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்." என்று யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் தாம் எழுதிய இரண்டாம் பாலபாடத் தொடக்கத்தில் இளம்பிள்ளைகளுக்கு அறிவுறுத்துகிருர்கள். இவ்வறிவுரை இன்றைய உலகியலில் எத்தனையோ வகையான துறைகளில் மேம்பாடு உற்றவர்களெனத் தங்களைக் கருதிக் கொண்டிருக்கும் எல்லோருக்குமே இன்றியமையாததாய் இருக்கின்றது. கடவுளை வழிபடுவதற்கெனவே நமது கருவிகரணங்கள் அனைத்தும் இறைவனால் தரப்பெற்றுள்ளன. திருநாவுக்கரசு சுவாமிகள் 'தலையே நீ வணங்காய்' என்று தொடங்கும் திருவங்கமாலைத் திருப்பதிகத்தில் இவ்வுண்மையைப் புலப்படுத்தியுள்ளார்கள். 'வணங்கத் தலைவைத்து வார்கழல் வாய் வாழ்த்த வைத்து' என்பது திருவாசகம். மனம் மொழி மெய் ஆகிய மூன்றினாலும் இறைவனுக்குச் செய்த வழிபாட்டினாலேயே அறுபான்மும்மை நாயன்மாராதிய திருத்தொண்டரனைவரும் நற்கதி பெற்றார்கள்.

இம் மூவகைப்பட்ட தொண்டுகளில் மொழி கருவியாகச் செய்யும் தோத்திரங்களுக்கு இறைவன் பெருமகிழ்வு கொண்டு அருளுவார். 'பாட்டுக்குருகும் தமிழ்ச் சொக்கநாதர்' என்பது மதுரைக் கலம்பகம். 'முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் முருகப்பெருமான் சொற்சுவை பொருட்சுவை மலிந்த தமிழ்ச் செய்யுட்களைக் கேட்டு அருளுவதில் வியப்பு ஒன்றும் இல்லையல்லவா? பிள்ளைப் பெருமானாகிய முருகவேளைப் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்தால் வந்தித்து வாழ்த்திப் பேறுபெற்ற புலவர் பலர். அவர்களுள் நமது தேவகோட்டைத் திருநகரத்துச் சிவாலயத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான் பேரில் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தமொன்று

இயற்றித்தந்து ஆன்மார்த்த பரார்த்த நலங்களிரண்டும் கிடைக்கும்படி செய்த பெரியார் முன்னர் அஷ்டாவதானமும், பின்னர் தசாவதானம், சதாவதானங்களும் செய்த பிருமஸ்ரீ சுப்பிரமணிய ஐயரவர்களாவார்கள்.

இந்நகரத்தில் இருந்த திருவாளர் விர. லெ. இராமசாமி செட்டியாரவர்கள் வேண்டுகோளின்படி இந்நூல் இயற்றப் பெற்றுத் திருவாளர் க.முரு.நா. சபாபதி செட்டியார் அவர்களால் 1869-இல் அச்சிட்டு வெளியிடப் பெற்றது. இதன் பிரதிகள் இப்பொழுது கிடைத்தற்கரிதாகி விட்டபடியால் மீண்டும் இதனை அச்சிட்டு வெளியிட வேண்டுமென்று இந்நகரில் சென்ற 19 ஆண்டுகளாக ஆண்டுதோறும் முருகப்பெருமானுக்கு நிகழும் கந்தர் சஷ்டி விழாவில் இயல் இசை நாடக நிகழ்ச்சிகள் நிகழவும் திருக்கோயிலில் சிறப்புப் பூசை, திருவுலா முதலியன செம்மையாக நிகழவும் நல்ல முறையில் தொண்டாற்றி வருகின்ற கந்தர் சஷ்டி விழாக் கழகத்தார் கருதினர். அவர்கள் விருப்பத்தை ஏற்று இவ்வாண்டுக் கந்தர் சஷ்டி விழாக் கழகச் செயற்குழுத் தலைவர் திரு. உ. மு. சுப. லெ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் தமது அன்னையார் திருமதி அழகம்மை ஆச்சி அவர்களின் ஞாபகார்த்தமாக இந்நூலை வெளியிடுவதற்குரிய பொருளுதவி செய்திருக்கிறார்கள்.

நூலில் செய்யுள் நலங்கள் பெரிதும் சுவைத்து இன்புறுதற்குரியனவாயிருப்பினும் பெரும்பாலான இடங்கள் புலமை நலம் உடையாருக்கே இன்பந்தருவனவாய் இருக்கின்றன. ஆதலின் நூல் முழுதுக்கும் உரையெழுதி வெளியிடலாமென எண்ணிய எண்ணம் அவகாச மின்மையால் நிறைவேறாது போய்விட்டது. நூல் மறைந்து போகாதபடி பாதுகாக்க வேண்டும் என்னும் குறிப்புக் கொண்டே இப்பொழுது மூலம் மட்டும் அச்சேறி வெளிவருகிறது

இந்நூற் பாடல்களில் தேவகோட்டை 'தேவை' என்று குறிக்கப்படுகின்றது.

இவ்வரிய நூலை வெளியிட முன்வந்த கந்தர் சஷ்டி விழாக் கழகத்தினர்க்கும, நூல் வெளியீட்டுக்குப் பொருளுதவி புரிந்த திரு. மெய்யப்ப செட்டியார் அவர்களுக்கும், நூலைப் பிரதிசெய்து அச்சிடுதல் முதலியவற்றில் அன்போடு ஈடுபட்ட வித்துவான் சு. நாராயணசாமி ஐயர் அவர்களுக்கும் எல்லாம்வல்ல முருகப் பெருமான் திருவருள் இன்பங்களை வழங்கியருளுவதாக.

நலம் பெருகுக.

வித்வான் காஞ்சீபுரம் சபாபதி முதலியாரவர்கள்

மாணுக்கர்

# புரசை அஷ்டாவதானம்

சபாபதி முதலியாரவர்களால் இயற்றப்பெற்றது.

(நிலைமண்டிலம்)

புனல்சொரி கொண்மூப் பொலிதர மீதளாஅய்க்
கனையுடுக் கணமெனக் காண்டகு மலர்த்திரள்
தஞ்சினைக் கெழுமிய தகைநறு மணங்கமழ்ந்
தஞ்சிறைச் சுரும்பர் அணவிய அலர்மதுப்
பூவின முடன்மேற் பொதுளிய பராஅரைத்
தாவில்சீர் அகக்காழ்த் தருநிறைந் தோங்கிய
நிலங்கடந் தெழுதரூஉ நெடுமுடிப் பகவன்
பொலன்பெறு காரெழில் போன்மென நிமிர்ந்து
தமையுறழ் தருங்கொல் தவத்துமாண் புடைத்தாய்
அமைவுறும் அமிர்தூண் அகலாக் கடவுளர்
புண்ணியப் பதியெனப் புகுந்துதாங் காணிய
நோக்குபு சேறலும் நுவலரு மன்னவர்
போக்கருந் தமவளன் புலனுறக் காணூஉ
மகிழ்தலை சிறப்ப வானகத் தைந்தருத்
தகையிவற் றினுக்குத் தவநனி சிறிதெனு
ஏத்தும் பொங்கரும் எப்புடை வயினும்
பாத்தூண் பல்பொருள் பாவலர் ஆர்வலர்க்
கீதலெஞ் ஞான்றும் இடையருப் புரவுந்
தீதில்பத் திமையும் தேவர்ப் பராவுசீர்
நன்மையும் ஒழுக்க நடையுந் தமவென
மன்னுங் கவிகை மருப்பண் பினரும்
தழுவுந் தேவைச் சதுரன் வீரப்பற்
கெழில்வளர் பௌத்திரன் எனஅன் னோன்முளை
இலக்கு மணவேட் கினியபுத் திரனெனத்
தங்குசீர் அகநறுந் தண்டார்த் தடந்தோள்
செங்கைக் கொடையணி செறிந்த புகழ்மை

தாங்கு மிராம சாமிமால் பகர்கென
மாங்குயில் தொகுதியும் மானுழை யினமும்
செந்தார்ப் பசுங்கிளி நந்தாத் திரளும்
இசைசொலு நோக்கு நசைஇநனி வாளா
ஒளிகொளீஇ அணில்வாற் குரல்கவ ராமே
மற்றவை கவர்வான் அற்றம் பார்த்தியற்
றினைப்புனங் காத்தருள் செம்மான் மகளொடு
அனைத்துல கமுந்தன் அடற்குடை புகுத்திய
ஒருகூ றிருகூ றூர்தியும் பதாகையும்
வருகால் நடத்தி வலத்தே யுயர்த்திய
வென்றிக் கணியென அன்றை வலாரி
முன்றரத் தென்பரங் குன்றின் மணந்த
தெய்வப் பிடியுங் கைபெற இருபால்
இறைகொளத் தேவைவீற் றுறைதரு குமரவேள்
மந்திரப் பெயர்மேல் வான்பொருட் பிள்ளைத்
தமிழொன் றெவர்க்கும் அமிழ்தெனச் சொற்றனன்
அன்னசீர்த் தேவை யம்பதி என்னும்
பொன்னிடைக் குயிற்றும் புனைமாண் அரதன
நிகர்வுற வருமே தகைவெங் குவையன்
வேதம் பயின்ற காதற் சீரியோன்
அறத்திற் றிரியாப் படர்ச்சிப் பெருக்கத்
தூதியம் இஃதென ஓதியெவ் வெவரும்
தன்பெருந் தவத்தை அன்புடன் வியந்து
கண்கூ டாகக் காணுமா உதித்த
தண்கோ கநகத் தாம மார்பினன்
பைந்தமிழ் நலந்தே ருந்திறற் செம்மல்
இருநான் கெனச்சொலும் பெருமை சான்ற
அவதா னத்தின் அரும்பெறற் புலமை
கவினுங் கற்புத் தவரு தியற்றுவோன்
சுப்பிர மணிய விப்பிர குலனே.

# சோடசாவதானம்

சுப்பராய செட்டியாரவர்களால் இயற்றப்பெற்றது.

(அறுசீர்க்கழிநெடில் விருத்தம்)

மட்டாரும் பொழிற்றேவை நகரினுமென்
　　மனத்தினும்வாழ் மணிவேற் காளை
கட்டாரும் மலரலங்கல் கழற்கீழ்ப்பிள்
　　ளைக்கவியாம் கமழ்தார் சூட்டி
முட்டாத புகழ்படைத்தான் வெங்குவையர்
　　செய்தவத்தின் முளையாய் வந்தோன்
அட்டாவ தானிநயம் தேர்கவிச்சுப்
　　பிரமணிய அழகி யோனே.

உயர்திரு வீர. லெ. இராமசாமி செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்றது.

பூவைப்புள் ளுள்ளகலை வாணியருள்
　　கூட்டுண்ணும் புலவோர் யார்க்கும்
பூவைப்புள் ளவர்புகழும் சுப்ரமண்ய
　　மாமறையோன் போர்வேற் றேவ
தேவைப்பிள் ளைப்பருவத் தியலதனால்
　　பரிந்துதுதி செய்யும் இந்தத்
தேவைப்பிள் ளைத்தமிழே தேவைப்பிள்
　　ளைத்தமிழாச் சிறந்த மாதோ.

அவையடக்கம்

அகரமுத லிற்சேர்த் தமுடமதாச் செய்யும்
இகலரிபோ லும்புலவீ ரீது—மிகவும்
பிளைத்தமிழே ஆயினும்நற் பிள்ளைத் தமிழாக்
கொளக்கடவ துங்கள் குணம்.

# தேவைப் பிள்ளைத் தமிழ்

**விநாயகர்**

மணிகொண்ட கடலுதக முழுதுமொண் டுண்டுலவு
மழைமுகிலெ னப்பொழியுமும்
மதநறும் புனல்பெருகு மருவிவெள் ளத்தடியர்
மடமையென ழுக்கழித்தும்

அணிகொண்ட சுடருருவ தாம்படிய மிழ்த்திட்டும்
அயர்வுறும் பிறவியாய
அகலெழு கடற்கரை யுடைத்தடிமை கொள்ளுமோர்
அருட்களிற் றைத்துதிப்பாம்

கணிகொண்ட குழனலார் வடிவினை நி கர்க்கமென்
கமலத் திருக்கைஎய்திக்
கமழ்தாது வெண்பொடி யணிந்துகண் ணீர்மாரி
காலநிதி மாதுநிதமும்

திணிகொண்ட தவமுயற லெனவுறை தடந்திருத்
தேவைவரு கந்தவேளைத்
திகழொளிகள் தவழும்வேல் குமரனைத் துதிசெயும்
செய்யபைந் தமிழ்தழையவே. (1)

# 1. காப்புப் பருவம்

## திருமால்

கார்மேவு பொழிலினக் கோடுகளில் அளிவைத்த
கமழ்நறும் இருல்கள் முந்நாள்
கதிர்மதிக் கோட்டில் கிழிந்திழி செழுங்கள்பல
கால்வழிச் சென்றுபாய

நீர்மேவு தண்டடம் பொலிகின்ற தேவையினில்
நீடொளிசெய் வேல்படைத்த
நின்மலனை ஈராறு திண்புயக் குழவியினை
நேயமொடும் இனிதுகாக்க

தார்மேவும் ஒண்டுளப மார்பமொ டழுந்துறத்
தாதிதழி யான்சடையினில்
தங்கலலை மாதைவைத் ததுமறைக் கிழவன்வெண்
சலசமினை நாவைத்ததும்

ஏர்மேவும் கலவிசெய வுன்னிரு மதமென்ன
எப்பொழுதும் ஒல்காதுசெவ்
விதழ்மலியும் அம்புயச் செல்வியை யிருத்துமொரு
எழில்திகழ் கருங்கொண்டலே. (2)

# பரமசிவன்

## வேறு

மலைமகள் தனதொளி நுதலினை இகலுமோர்
வண்கதிர் வெண்பிறைமேல்
மதிகரு வியரவு றுகணையை விடவது
வந்து தொடர்ந்துபினே

வரவுளம் வெருவியே இவணெடு மரியிடை
மன்னியும் வாழ்வமென
மனமொடு சரணென அடியிணை களின்மிகு
வன்கதி சென்றுபுக

அலைமக ளதுகரு தியவுணர் வொடுபகை
யாளறி யாதுதிரை
அகலிரு கரமதின் மறைபட இருமதி
அஞ்சலெ னச்சொலியவ்

வரவினை யுமரிய சிறையிடு தகுதிய
தாமென மின்னொளியை
அவிர்சடை யுறுபர சிவமெனும் ஒருமுதல்
அன்புடன் அருள்புரிக

மலைதரும் அவுணர்கள் இறைசுரன் அணிபொரு
வாரிதி யும்பெருகி
வழியெழு புவியையும் அழிசெய வருபுனல்
வாரிதி யும்புலவர்

மனன்முதல் எவரையு மயர்வுற அடுமொரு
வன்கிரி யும்பொனொளி
மருவிய வடபுல மிசைவுறை தருபொலன்
வான்கிரி யுந்திணிய

சிலையொடு படைவழு விவலியும் விழவடி
செய்யயில் செண்டுகொடோர்
தினம்அமர் பொருதிட வினர்பலர் எனஎழு
செல்வனை எந்தையைமற்

செழியபொ ழிலலரி னமலரு குநறிய
தீமது மாரிபெயத்
திகழ்வள மறுகுமு ழுவதும எறுபொரு
தேவையுள் வேளினையே. (3)

# பராசக்தி

தாது விரியும் இதழி கங்கை
சலமும் தலைக்கொண் டுவந்துமுன்னம்
தாழ்ந்து வணங்கிக் கமழும் அந்தத்
தண்ணீர் ஆட்டிக் கடியமலர்

ஓது மறையால் அருச்சனைசெய்(து)
ஊடல் தவிர்ப்பாய் எனப்பரமன்
உள்ளம் களிக்கச் சிறிதுநகை
ஒளிசெய் அமலை சரண்துதிப்போம்

வாது மருவி அமணரெதிர்
வலிய தனது பதிகமொன்றை
வையை நதியில் எதிர்ஏறி
வரமுற் சரவ ணத்துதித்த

காது பனிரண் டாறுமுகக்
கனக வரையாம் இரண்டாறு
கைகள் உடையானைத்தேவை
கதியாம் அமுதைப் புரக்கவே. (4)

# விநாயகர்

மெய்த்துதி செய்யடி யார்தீ வினைத்தறி
வீழ்த்திப் பவத்தெழு கடலைக் கலக்கியும்

பத்திய தாகிய தந்திற் பிணிப்புறு
பாசக் களிற்றைப் பராவித் துதிக்குதும்

பைத்தது கிற்கொடி நிலவப் பொலன்சுடர்ப்
பானுமெய்த் தோய்தரு மாடத்தி னங்கிளர்

எத்திசை யும்புகழ் தேவைப் பதிக்குளே
ஈசன் அளித்தருள் குகனைப் புரக்கவே (5)

# பிரமனுதியோர்

மடைக்கரை உடைத்திடு மதுப்புனல் சொரிந்தருள்
மாவின் தருக்களை வளக்கனி கொளக்கவி

வளைத்திட நிமிர்ந்துவிண் வானத் தணித்தரு
மலர்ச்சினை முறித்துடு வினத்திரள் உதிர்ந்திட

வாவும் பொழில்செறி மலர்ப்பணை யுளிற்றவழ்
வளைக்குலம் உவந்தளி வால்வண் மணிக்குவை

கிடைக்கரும் அதற்கொரு குடைக்கதிர் எனும்படி
கேழ்வெண் நிறத்தொளி கிளக்கவி ரியக்கயி

ரவக்கடி அவிழ்ந்தலர் கீழெண் திசைக்கமழ்
கிழத்தலை நிகர்க்குரை பயிற்றிய முதம்பணி

கேள்விக் கருத்துபொன் கிளைக்குலம் வளர்த்திடும்
மடக்கொடி இனம்கனி கீதம் பயின்றிடும்

திடத்தக ரிகட்குலம் மதக்கடம் இழிந்திடு
தேவைப் பதிக்குளே சினத்தொரு வயிற்படை

யினைப்பொரு கரந்தொடு சேயைச் சிருட்டியன்
சிறத்தணி முடிப்பதி வணக்குகு லிசம்பிடி

சேனை புரப்பவன் செழித்தச லசத்தரி
உரத்திலும் வதிந்திரு செல்வத் திருக்கனி

விடைக்கொடி யவர்க்கிர சிதக்கிரி யெனும்குரு
மேவம் புயத்தினள் வெறித்திக லுறுத்தும

யிடத்தசு ரனுந்தலை வீழச் சிதைத்தவள்
மிகைத்தவ ருடல்தசை அறுத்துநீ ரருந்தெழு

மின்னார் வசுக்கதிர் விரிக்கினர் மருத்துவர்
உருத்திரர் எனும்புகழ் மேலோர் புரக்கவே (6)

(வசுக்கள்—எண்மர். மருத்துவர்—இருவர், சூரியர்—பன்னிருவர், உருத்திரர்—பதினெருவர். ஆக முப்பத்து முக்கோடிதேவர்)

## ௨. செங்கீரைப் பருவம்

வான்மறை பரம்பொருணீ தான்பதம் அளித்திடென
 வாய்புலம் புஞ்சிலம்பும்
வாணுதல் மிசைக்கைபுனை யும்பொட்டு நாற்றியொளிர்
 மாமணிச் சுட்டியும்வாழ்

கான்மதியெ னப்பொலிய வயிரம் குயிற்றிமிளிர்
 கனகத் தணிப்பட்டமும்
கான்கமழ்செய் சூழியக் கொண்டையும் இலங்கவிரு
 காதிற் குதம்பையசைய

ஆன்மருவு பொன்துவசன் ஈரைந்து புயநிறை
 அணிமலேக ளிற்பினர்பல
ஆயகிரி முழுதிவற வோர்பயிற் சித்தொழிலே
 ஆற்றல்போல் ஏறியாடும்

தேன்மலி பொழில்பெருகு தேவைமன் இளங்குழவி
 செங்கீரை ஆடியருளே!
தெங்கீரை உமைமுலேகள் தங்கீரம் உண்டவன்
 செங்கீரை ஆடியருளே! (7)

தேங்கழ் புனல்பெருகு பூஞ்சரவ ணத்தினிடை
தெண்ணீர்ப் பெருஞ்சலதியில்
தேசுதயம் எனவிளங் கதிரொடும் உதித்துநல்
சிவஞான அமுதமுண்டு

சேங்கமல வான்மலரை யுங்கரிய தாமெனச்
செய்யுமிரு தாளிலொன்றைத்
திருந்துற மடக்கிமற் றென்றைநீட் டித்தளிர்ச்
செழியகை இரண்டுமண்மின்

ஓங்கரிய முன்தவப் பயனிதென் றுளமெச்ச
வூன்றியும் சிரமணுந்தும்
ஒளிமுகம் தொண்டர்நன் கவியுமென் புன்கவியும்
ஒப்பினேம் என்னஅசையத்

தீங்களி யிசைக்கிலகு தேவைமுரு கக்கடவுள்
செங்கீரை ஆடியருளே!
தெங்கீரை யுமைமுலைகள் தங்கீரம் உண்டவன்
செங்கீரை ஆடியருளே! (8)

வேறு

கொந்தித ழிப்பரன் அன்பு மிகுந்தக்
கொடியிடை முகம்நோக்கிக்
கூறுதி யெங்குபு ரிந்தமி யாமிக்
குழவித் தவமென்ன

அந்தரி நந்தவம் அன்றென தைமலே
யான்றன தென்றருள
அம்மலே யற்குநீ செல்வியெ யானதி
ஞனினே ஒப்புவரில்

சிந்துல கெங்கணும் என்று கரங்கொடு
சேர்த்திறு கத்தழுவித்
தினமுந் தனதிடை வைத்து நிரம்பிய
சிந்தை மகிழ்ந்திடமெய்

அந்திகொள் தேவையில் வந்தரு ளுங்குகன்
ஆடுக செங்கீரை!
ஆடுக லாபியின் ஆடுமோர் தூயவன்
ஆடுக செங்கீரை! (9)

கண்டடு செவ்விய பன்னிரு வாய்ச்செங்
கனியிழி யமுதோடக்
கதிரிள முத்தினை யொத்திடு வெண்ணகை
கான்றொளிர் நிலவாடக்

கொண்டை யிலங்கிய முச்சி யசங்கக்
குழையொடு குழைசாடக்
கொண்ட லெனக்கரு மெய்யுடை யத்திண்
கொடியவர் முகம்வாட

விண்டவர் கள்களி கொண்டு மனத்தினின்
மேம்பொரு ளுந்தேட
மெய்யடி யார்பிற விக்கடல் வற்ற
விழிக்கரு ணையினுட

அண்டமெ லாமிசை கண்டருள் தேவையன்
ஆடுக செங்கீரை!
ஆடுக லாபியின் ஆடுமொர் தூயவன்
ஆடுக செங்கீரை! (10)

வேறு

மன்னிய எல்லை மறைத்தவிர் சுட்டி
மணிச்சுடர் இனமாட
மாமதி தன்னைமெய் ஊறுடை யானென
வளரறு முகமாடப்

பன்னிரு திண்புய மாமலை மீது
பசுந்தா ரசைந்தாடப்
பாரதி பூமக ளார்க்கிறை யான
பரம்பரை யுள்ளாட

பொன்னவை மன்னரன் என்னிரு கண்மணி
போல்வா, யென்ருடப்
போர்முகம் ஆர்த்திடு வாரணன் வானிறை
போதனும் இசைபாடத்

தென்னவன் வெம்பிணி தீர்த்தருள் உத்தம
செங்கோ செங்கீரை !
செங்கம லப்பணை தங்கிய தேவைய
செங்கோ செங்கீரை ! (11)

# 3. தாலப் பருவம்

அளறுட் படுசெங் கழுநீரும்
அலர்ந்த குமுதக் குலமுமணம்
அவிழும் சலச நிரைகளுந்தண்
ணளியா லளித்த மதுநீரும்

கிளரும் சசிவெண் சிலைகளினைக்
கிடத்தி யணைத்த நெடுங்கங்கு
கிழக்கில் உதித்து வருமிரவுக்
கிழவன் கதிர்கண் டுகுநீரும்

உளரும் குரவைக் குறக்கூத்தின்
உழவர் அருத்தப் பசுஞ்சாலி
ஒளிசெய் அமரர் உலகமிசை
உறையும் பசுக்கன் றினங்கறிப்ப

வளரும் பழனத் தேவைநகர்
வாழ்வே தாலோ தாலேலோ
மலையான் மகள்செய் தவத்துதித்த
மைந்தா தாலோ தாலேலோ. (12)

வேடன் அலராம் கணைகளைந்தை
வெறிய கருப்புச் சிலைகுனித்து
மேவும் அளியின் இனந்தொடுத்த
மென்னாண் ஏற்றித் துரந்திடச்சூ

தாட அமரும் கருவியையொப்
பாகா அதுதன் நீர்மையினில்
யாரும் உருட்டி வெட்டென்றே
அறையச் செயும்வெம் முலைசுமந்த

ஊடல் மருவும் மடநல்லார்
உலவு மழைக்கார் காலமணித்
துற்ற அளவில் விரைவாக
உள்ளம் களித்து மகிழ்ந்தேறும்

மாடம் நிறையும் தேவைநகர்
மன்னே தாலோ தாலேலோ
மலையான் மகள்செய் தவத்துதித்த
மைந்தா தாலோ தாலேலோ. (13)

### வேறு

கண்படு செங்கழை வார்கமு கென்னக்
கனிமுதிர் வாழையெலாம்
காய்நிறை கொண்டிரு வெவ்விய சீதக்
கதிர்தொடு தெங்கென்ன

வண்படு நெற்பயி ரின்கண முற்றும்
வான்தொடு வேனென்ன
வானகை செய்தவிர் மல்லிகை வெண்டா
மரைமகள் அகமென்னப்

பண்படு வண்டு விழாத கொழுஞ்சண்
பகமலர் இனமெல்லாம்
பாகுறு சொற்றிரு மாதுறை யும்செம்
பதுமமெ னப்பெருகும்

தண்பணை சூழ்தரு தேவை நகர்க்கிறை
தாலோ தாலேலோ
சமரம் விளைக்க எடுத்தருள் வேலவ
தாலோ தாலேலோ (14)

திங்களொ டுந்தும் பைக்கிணி கட்செவி
சேர்த்திய வேணியரன்

தேசுறு மந்தி நிறத்தொளி தந்துந்
திகழ்திரு மெய்யினுமப்

பங்கமர் சங்கரி பைங்கதிர் செய்யும்
படிவத் தினுமேறிப்

பாதச் சுவடும் அழுந்த மிதித்துப்
பண்புடன் ஆடல்தொறும்

மங்கல மவ்விரு வர்க்கு முளுற்றிட
மன்னிய வேலைதிருஉ

மஞ்சனம் ஆட்டுதல் போன்மென வேகனி
வாயமு தம்பொழிசீர்

தங்கிய தேவையில் வந்துறை யுங்குக
தாலோ தாலேலோ

சமரம் விளைக்க எடுத்தருள் வேலவ
தாலோ தாலேலோ! (15)

வேறு

பாவத் திருக்கறு வேளே
தாலோ தாலேலோ
பாசத் தொடர்க்கொரு வாளே
தாலோ தாலேலோ

காவல் கணன்மரு மானே
தாலோ தாலேலோ
கானக் கவிக்குறு தேனே
தாலோ தாலேலோ

சேவற் கொடிக்கர வாகா
தாலோ தாலேலோ
சீதப் புனக்கொடி பாகா
தாலோ தாலேலோ

தேவர்க் கிறைக்கனு கூலா
தாலோ தாலேலோ
தேவைப் பதிக்கருள் வேலா
தாலோ தாலேலோ (16)

# 4. சப்பாணிப் பருவம்

அண்டமுழு தும்தனக் குள்ளடங் கத்தனித்
தரசுசெய் திருந்துநாகத்
தமரரை யவர்க்கிறைவ ரைக்கமல னைப்பணியி
னணைமிசைத் துஞ்சுவனைவே

தண்டனரு ளிற்கொண்ட திறனதா லயர்வுறத்
தண்டித்து றுக்குசூரின்
தானைப் பெருங்கடலி னுக்கரி யெனப்பொரு
சமர்க்களத் துக்கூளிகள்

உண்டரி யெனக்கரிச் சித்திடப் புணரிமிசை
உலகெலாம் பற்றுமிருளை
உண்ணவரு பரிதியினை நண்ணவயி லேந்துதளிர்
ஒண்கரம் கொண்டுமலர்கொள்

தண்டலை மிகுந்தேவை யம்பதியில் மேவுகுக
சப்பாணி கொட்டியருளே
தப்பாணி கட்டர்பணி யப்பாணி ஒப்பிலன்
சப்பாணி கொட்டியருளே! (17)

வண்டருவி னங்கொடிகள் தந்திடும் கமழ்கடிய
வான்மலர்க ளும்பணிக்கு
வனைதிரவி யங்கொண்டு வந்துநின் முன்புபல
வந்தனை புரிந்தமலரான்

மண்டரு பொருட்கணிறை யுந்தனிய நான்மறையின்
மந்திர அருச்சனைபுரீஇ
வணங்குநிறை யுன்புடைய தொண்டருள மகிழவோர்
வரமளிக் குங்கரத்தோ

டண்டர்களும் நீதஞ்சம் என்றிறைஞ் சக்கொடிய
அசுரர்கட் கஞ்சலென்ன
ஆதரிக் குஞ்சிறிய கைமலரொ டுஞ்சேர்த்தி
அவிர்மதில் தேவைநகரார்

தண்டதரன் அரிகறைக் கண்டனுத வுஞ்சிறுவ
சப்பாணி கொட்டியருளே!
தப்பாணி கட்டர்பணி யப்பாணி ஒப்பிலன்
சப்பாணி கொட்டியருளே! (18)

வேறு

மாப்பிடி யொடுமத மூன்றிழி தந்திகள்
வான்பரி யின்திரள்கள்
வாவித் திரிதரு தேவை நகர்த்திரு
மறுகிடம் எங்கும்பொற்

காப்பிடு முன்கைப் புன்மதி யைப்பொரு
கான்கமழ் குஞ்சிமிகும்
கவினுற ஆடல் பயிறரு சிறுமகர்
கணமெஞ் சிற்றிற்குச்

சாப்பிட வந்தருள் எந்தை எமக்குத்
தயவுவி ஊத்துள்ளம்
சார்கனி வார்மகிழ் வோடுபு ரிந்தே
சடுதியில் எனவோதிக்

கூப்பிட நகைசெய் துங்கொட் டுவபோல்
கொட்டுக சப்பாணி
குட்டுகொ ளுங்கரி யிட்டமி குந்துணை
கொட்டுக சப்பாணி! (19)

கந்த மிகுத்த மலர்ச்சடை யோனுங்
கதிர்விடு பிறையரவக்
காசொளி வீசுப டம்பணி லம்பொரு
கந்தர மல்குநுதல்

அந்தரி யுந்தரு மின்சுவை யாலடு
மடுசிலை யுந்தூவி
அகனெடு மாமறு கிற்புக் கங்ஙனம்
ஆடுசி ஞர்கள்குழூஉத்

தந்த மனங்களி கொண்டிடு மட்குவை
சாடிய துகள்போகத்
தண்டளி ராங்கர மொன்றுடன் ஒன்றைநி
தட்டுத றனையொப்பக்

கொந்தலர் காநிரை விண்டொடு தேவைய
கொட்டுக சப்பாணி
குட்டுகொ ளுங்கரி யிட்டமி குந்துணை
கொட்டுக சப்பாணி! (20)



வேறு

பூவை யிருந்தவிர் கின்றவு ரத்துள பத்தாமன்
போதவி ழுங்கடி வீசிய செம்பது மத்தாமன்

காவை யிருங்கொடை தந்திட வைத்தவி ணிறையானேர்
காணிமை யாதடி பூமிசை உறையா மிகுவானேர்

ஏவை நிகர்த்தகண் மையழி தென்மலே யப்போதன்
ஏத்தி யிறைஞ்ச இணேத்திரு மாமலர் அப்பாதம்

சேவை கொடுத்தருள் உத்தம கொட்டுக சப்பாணி
தேவை நகர்க்கதிர் வேலவ கொட்டுக சப்பாணி! (21)

# 5. முத்தப் பருவம்

வழங்கு கதிரார் வளைக்குலங்கள்
வயிற்றில் தரிசூல் உளைந்தளித்த
மணியின் சுதையால் தீற்றிமிளிர்
மாடத் திருந்துள் ளகமகிழ்ந்து

கழங்கு பயில மேல்வெடிபோய்க்
ககன மிசைச்சென் றதைப்பற்றக்
கருதி மிகவும் விரைந்தெழுந்த
கலன்பெய் முலையார் முகமதனைப்

பழங்கு வளைத்த திரைப்பயமாம்
பரவை உதித்த மதியென்றே
பகலில் குமுத முகைமலரப்
பண்ணே ழையும்பைஞ் சிறையளிகள்

முழங்கு தடஞ்சூழ் தேவைநகர்
முருகா முத்தந் தருகவே
முடங்கு பிறைக்கோ டுறுசடையான்
முதலே முத்தந் தருகவே. (22)

கதிர விரும்வெண் சுதைதிருத்தும்
கன்னி உயர்மா ளிகைமலையக்

காலவந் துலவும் அரமியத்தில்
கால்கள் பெயர்த்தி உலாய்த்திரும்பி

எதிர வருமங் கையர்முகத்திற் (கு)
இருபாங் கினுந்தூய்க், கவரியென

இளம்பா ளைகளின் கணம்விரிக்கும்
எழிற்கூர் கமுகும் குயிற்காளம்

அதிர வளைக்கும் தரளமுதிர்த் (து)
அடரும் கணுக்கன் னற்சிலைநாண்

ஆர்த்து மதன வேள்பெரும்போர்
ஆற்றக் குறிப்பின் உரைபுகன்றோர்

முதிரரி யுஞ்சூழ் தேவையின
முதமே முத்தம் தருகவே!

முடங்கு பிறைக்கோ டுறுசடையான்
முதலே முத்தம் தருகவே! (23)

வேறு

புதியகன கத்தினவ மணிகுயிற் றிச்செரிய
பொலிவுதிக ழேறுதாங்கும்
பொலனெரு வுருப்பெற்ற தாமெனக் கண்கதுவு
பூந்தவி சிருந்துகூர்ந்து

மதியறியு மனுநீதி கொடுசுந் தரச்செம்மல்
மலையனருள் அங்கயற்கண்
மாதுக்கும் இம்முறைமை வாரா வெனப்புகல
வையம் புரந்துசெங்கோல்

பதியர சிருந்துதென் னவர்மரபி னிற்கொரு
பசுங்குருந் தாகிவளரும்
பரமசுத எழிலாரு வேணுபுர முற்றுவாய்
பகரொணு மற்றெப்பிலாக்

கதியறிய அதர்சுட்டி யுரைதமிழ் சொரிந்தநின்
கனிவாயின் முத்தமருளே!
கழைமருவு செய்த்தேவை நகருறையும் ஒருசெல்வ
கனிவாயின் முத்தமருளே! (24)

கொந்திதழ்ப் பங்கய மணம்பொதி புனற்றடம்
கொழிதிரை எடுத்துவீசக்
குடவளை யினம்சூழ் உடைந்துதரு வெண்மணிக்
குவைகளுக் குங்கடஞ்சால்

தந்தியி னணிக்கோட்டி நின்றுசொரி தந்தமுத்
தந்தனக் குங்கொண்டல்கள்
சார்ந்துகட னீருண் டுவந்துதுளி பொழிகின்ற
தரளம் தனக்கும்வளனுர்

சந்தவய லுட்டணீர் பெருகித் தழைத்ததலை
சாய்ந்துகொலை யுங்கொண்டசெஞ்
சாலிமுத் திற்கும்விலை உண்டொன்றை ஒப்பிலாத்
தனியமுத வெள்ளமிழியும்

கந்தநின் முத்தந் தனக்குவிலை யின்மையால்
கனிவாயின் முத்தமருளே!
கழைமருவு செய்த்தேவை நகருறையும் ஒருசெல்வ
கனிவாயின் முத்தமருளே! (25)

வேறு

பனிமலை யவர்தரு கொடியிடை உமையவள்
பண்பில் உதித்தவனே!
பரசிவன் உரையென ஒருபொருள் அகமகிழ்
பற்ற உரைத்தவனே!

தனியளி முரல்மது ஒழுகும் அரத்தத்
தாரணி யும்புயனே
தலமுழு கவருமெ ழுகடலும் வற்றத்
தறுகி எழுந்தவனே!

நனிசுரர் இறையொடு திகிரியன் வந்துநின்
நறுமலர் ஒண்கழலை
நயமொடு துதிசெய அசுரர்கள் தலைகளை
நைத்த அயிற்கரனே!

முனிவர்கள் துறவர்கள் உறைதரு தேவைய!
முத்தம் அளித்தருளே!
முதுமறை தமிழினில் உரைசெய்த கனிமொழி
முத்தம் அளித்தருளே! (26)

# 6. வருகைப் பருவம்

காஞறு கனிகொண் டுவர்க்கட லுடைத்திக்கு
கைகொண்டு வெறிகொள்ளுமோர்
கள்ளுடைத் துக்கமழும் அவிததி யொடும்பயக்
கடலையும் அழைத்துக்கொடூஉத்

தாஞறு கதிசெலச் சக்ரவா ளக்கிரி
தடுக்கக் கரங்களென்னும்
தரங்கத் துடைத்துப் பெரும்புறம் சூழ்கடல்
தலைமகன் மகிழஆட்டும்

தேஞறு பொழிகின்ற தண்கடப் பந்தொடைகள்
தேசுறும் கனகவரையைச்
செண்டுகொண் டெதிர்சமரில் வென்றநின் பனிரண்டு
திண்புயம் தடவியசைய

வாஞர் பொழிற்கனிறை யுந்தேவை மாநகரில்
வந்தநா யகன்வருகவே!
மாதிறம் சுரனுடலம் மாதிரையி னைச்சாடும்
வடிகொள்வே லவன்வருகவே! (27)

சூதைவெட் டச்செய்து வள்ளங் கவிழ்த்துபொற்

றேய்குரும் பையையுதிர்த்துத்

தூயபொன் முடிகளைக் கம்மியர்கள் கைகளால்

சுத்தியல் எடுத்தடிக்க

ஓதியக் கோங்கரும் பைக்கடி இலாதவெற்

றுணர்கவென வைத்துநிதமும்

ஒல்காது கந்துகத் தைப்பொரு கரத்தெடுத்

தொவ்வா தெனக்கடுத்து

வாதையுட் கொள்ளவிப் படிமிசை அடித்துநீர்

வாரியெழு கொப்புணிற்கு

வாழ்நாள் கணமெனச் சவித்துத் தனைத்தானெ

மானவளர் கொங்கையால்பூ

மாதைவென் றிட்டநல் லார்கள்மிகு தேவைநகர்

வாழ்கந்த வேள்வருகவே

மாதிரம் சுரனுடல மாதிரையி னைச்சாடும்

வடிகொள்வே லவன்வருகவே (28)

வண்டினொலி இடியே றிடித்துக் கவின்றபொன்
வட்டத்த கட்டணிமினின்
வண்மையென வேவிதிர்த் துக்கடி கமழ்ந்ததண்
மதுமழையை ஊற்றுகுழலாம்

விண்டினை நிதம்பரித் துத்தேய்ந்து வாடும்இடை
மெல்லியர்கள் தாமரையினை
வீழ்த்தும் தனத்தடத் தேமலர் துரக்கவெம்
வேனிலுக் குரியபரமன்

கண்டழல் எதிர்ப்பட் டெரிந்தவர்க் கோருதவி
கருதியது போலவெளியாம்
ககனமுக டைப்பொருதி முட்டக் கரும்பினைக்
காகுலைத் தலைக்குனிந்தே

மண்டிவளர் செய்த்தேவை யம்பதிக் கமுதமென
வாய்ந்தமன் னவன்வருகவே
மாதிரம் சுரனுடல மாதிரை யினைச்சாடும்
வடிகொள்வே லவன்வருகவே. (29)

வேறு

பூவை உறையும் செழுங்கமலப்
புனலார் தடத்தில் நெடுந்தரங்கம்
பொருதும் பெருந்தண் ணுமையறையப்
புவனம் விழுதிண் சிலைமதகு

மேவ லிசையும் சுருதிதர
மென்பா ணளியின் இனமிழற்ற
விரைவா வுளத்தே உவந்துகஞ்சம்
வெருவ ஒலிப்ப மண்டுகம்

ஏவை இகழ்கண் பொதுமாதர்
இயற்று நடனம் பெருவாளை
ஏய்ப்பக் குதித்தா டப்பரிசில்
எனவால் வளைகள் மணிசொரியும்

தேவை நகரில் வருமமரர்
தேவே வருக வருகவே
சேவற் கொடிகொண் டெழுந்தருளும்
சேயே வருக வருகவே (30)

கூனேய் படிவப் பிறைமுடியார்
குருவே வருக சரவணத்தில்
குருந்தே வருக குணம்எழிற்குக்
குன்றே வருக மகவுலகக்

கோனே வருக ஆறுமுகக்
கோவே வருக மறையின்முடிக்
கொழுந்தே வருக இமையவர்கள்
கூறே வருக பகரவொணு

வானே வருக சமணர்கட்கு
வாதே வருக அழிவில்லா
வாழ்வே வருக உமையவட்கு
மகவே வருக உள்ளூறும்

தேனே வருக தேவைநகர்த்
தேவே வருக வருகவே
சேவற் கொடிகொண் டெழுந்தருளும்
சேயே வருக வருகவே. (31)

# 7. அம்புலிப் பருவம்

நிழலுதவு தண்கதிரொ டுதயஞ்செய் சந்திரன்
நீபரம சந்திரனிவன்
நிசிதரை அழிக்கவெழு வலவனீ இவனுமன்
னிசிதரை அழிக்கவலவன்

அழவலில் வல்லியரை வாட்டுவாய் நீஇவனும்
மல்லில்வல் லியரைவாட்டும்
அணிபொருவும் கலைகளெட் டெட்டுடையை நீஇவனும்
அந்தவெண் ணெண்கலையினன்

குழவியென வேநீயும் வளர்பக் குவத்தரன்
கோடீர வத்தமறைவாய்
கூறிவனும் அவ்வரன் கோடீர வத்தமறை
குழவியாய் நினையொத்தலால்

அழகுபொலி தேவைநகர் உறையும்வடி வேலனுடன்
அம்புலீ யாடவாவே
அலகில்தமிழ் மறையினுரை பகரவரு குமரனுடன்
அம்புலீ யாடவாவே. (32)

தன்னம்மை யின்கலையில் ஒருபேத மெனநினைச்

சதுமறைகள் அறைதல்கண்டோ

தானரசியற்றவந் தருடென்னன் மரபுவழி

சார்ந்தமுதல் என்றுணர்ந்தோ

முன்னந்த ரித்தகறை வைத்தகந் தரர்சடை

முடிக்கண்ணி யெனநினைந்தோ

முகுந்தன் துயின்றகடல் ஈன்றதென வுங்களி

முதிர்ந்தோ அலாதுகுறவர்

மின்னின்மு கத்தினுக் கொப்பதென் ரேவிவன்

விளிக்கவுற் ருய்நினக்கு

மேவுதர மீதன்று முன்தவப் பயனிதா

மிகவுமரி தாதலால்வெள்

ளன்னங்கண் வளரெழில் பண்ணைமலி தேவையனெ

டம்புலீ யாடவாவே

அலகில்தமிழ் மறையினுரை பகரவரு குமரனுடன்

அம்புலீ யாடவாவே. (33)

கோளாகி யுறுமொன்ப தின்மர்க்குள் ஒருவனீ
கோவீரர் ஒன்பர்க்குமேல்
குறையிலா ஒருவனிவ னீயொரு நாட்குநாள்
குன்றுமொளி யுடையாயொரு

நாளாகி னுங்குறை படாதவொளி யுடையனிவன்
நாடுமோர் தராபதியெநீ
நாகமுத லாயெறும் பீரு முயிர்க்கெலாம்
நண்ணுபதி யாகுமிவனீ

வாளாகி நிதமுநில் லாதுலவு கின்றவொரு
மண்டலம் கொண்டவனிவன்
மன்னண்ட கோடிகளை விளையாடு சிற்றிலா
வைப்பனு தலினன்பரை

ஆளாக அருளுதவு தேவைநகர் முருகனுடன்
அம்புலீ ஆடவாவே
அலகில்தமிழ் மறையினுரை பகரவரு குமரனுடன்
அம்புலீ ஆடவாவே. (34)

வெய்யவர வோரிரண் டிற்கஞ்சி யார்கலைகள்
மேவிமுழு மதியமாகும்
வேலையில் விழுங்குமென வுன்னியிர விற்கடலின்
மிகவிரைந் தோடிவீழ்ந்து

நய்யமன இன்னலுடை யாய்நீ இவன்தினம்
நடத்துபரி போலும்வாக
னப்பெயரி னைச்சொல்லி னவ்வர வினங்களும்
நடுக்குற்று மெய்யொடுங்கிச்

செய்யகதிர் வீசிய பணத்தலை கவிழ்த்துத்
திகைத்துவாய் வெருவுநிற்குத்
தீயகொடி தாகுமத் தெவ்வையடி யோடறச்
செயவேண்டு மெனிலெவர்க்கும்

அய்யனிசை சேர்தேவை நகரிலுயர் துய்யவனெ
டம்புலீ ஆடவாவே
அலகில்தமிழ் மறையினுரை பகருவரு குமரனுடன்
அம்புலீ ஆடவாவே. (35)

தழைக்கும் கிருபைக்குமஞ் சரத்திரு முகர்க்குமொரு
தந்தந் தனைப்பகைத்தாய்

தனிமுதற் பரமற்கு நண்பனெனை வேநிதம்
சடிலத் திருந்துமவர் தூக்

கழைக்கும் கணைப்பூவி னுக்குமகிழ் மதனுக்கோர்
கவிகையென வேயிகைத்தாய்

கனகவம் பரமுற்ற மாற்குமணை ஆகுமக்
கணபணத் தோடெதிர்த்தாய்

பிழைக்கும் வகைக்குனக் கதரில்லை ஆதலின்
பேரளியின் நினைவிளித்தான்

பிணக்கிஇவ னும்வெகுளி கொளுமுன்ன மீதருள்
பெறுசமயம் என்றமரரை

அழைக்கும் கொடிப்புரிசை ஆர்தேவை நகரிறையொ
டம்புலீ யாடவாவே!

அலகில்தமிழ் மறையினுரை பகரவரு குமரனுடன்
அம்புலீ யாடவாவே! (36)

# 8. சிற்றிற் பருவம்

காப்பு புரியெம் உயிர்த்துணையாம்
கனக ணேமெய்ப் பரம்பொருளைக்

காட்டும் உயர்நான் மறைமுடியும்
கருதும் அடியார் அகமலரின்

நாப்ப ணினும்பொன் ஞந்தலத்தின்
நடுமா மலையைக் குனித்தரிகள்

நடுங்க நகைக்கும் இறையவனின்
நான்கு புயமும் உளத்துவகை

பூப்ப அருட்பால் ஊட்டுமைகண்
புலனும் சிறப்ப ஒளிவிளைத்துப்

பொருந்து நினது சிறியகழல்
பூந்தா மரைகள் இரண்டுமிகச்

சேப்ப வருந்தப் பொருதெமக்குச்
செல்வா சிற்றில் சிதையேலே!

தேவை நகருள் தேசுமிழும்
சேயே சிற்றில் சிதையேலே! (37)

புலம்புங் கரிவண் டினநுகரப்

புனலா மதுமா மழைசொரியும்

பொழிலார் தவமோர் வடிவெடுத்த

பொதிகை யுறையும் குடமுனியும்

அலம்புந் திரைவெண் வான்கங்கை

அமரும் பவன மாளரியும்

அருண கிரிவந் தருளுமொரு

வன்பா முரைகொண் டணிவோனும்

கலன்பெய் கலைமா மகளிறையுங்

கருதிப் புனைந்த மலர்த்தாது

கமழும் நினது கழலிணையில்

களங்கத் துகள்கள் படத்தகுமோ

சிலம்புக் கிறையோன் மகளளித்த

சிறுவா சிற்றில் சிதையேலே

தேவை நகருள் தேசுமிழும்

சேயே சிற்றில் சிதையேலே. (38)

நீண்ட கருணைச் சுவர்ச்சுற்று
நிறுவி அறிவாம் தூணிறுத்தி
நிமல வெள்ளியாம் முகடுதனை
நிலவு நிரப்பி வேய்ந்ததன்மேல்

காண்ட வரும்பே ரானந்தக்
கலசம் திருத்தி உள்ளுலவும்
காலா லவியாப் பரஞ்சோதிக்
கதிர்கால் விளக்கேற் றிட்டழியா

வேண்டும் உயர்வான் வீடதனை
மெய்யாய் உளத்தோர் கணநினையெண்
மேலோர்க் களிப்பாய் எப்பொழுதும்
விரும்பும் எமது சிற்றிலைத்தாள்

தீண்டி அழித்தல் அழகோநல்
தேவே சிற்றில் சிதையேலே
தேவை நகருள் தேசுமிழும்
சேயே சிற்றில் சிதையேலே. (39)

வண்டு குடிகொண் டுறைந்தகுழல்
வல்லியஞ் சுமையும் பரித்ததன்றி

மருங்கு றுவள நறுங்கமல
மலரால் உகுத்த ஒளிமுத்தும்

விண்டு துகடீர் வளைக்குலஞ்சூல்
வெடித்துத் தருவான் மணிமுத்தும்

வேயின் கணுவில் இருந்துமிசை
வெடிபோய் விழுந்த பெருமுத்தும்

குண்டு வரியின் இப்பிமுத்தும்
கொண்டு சுமந்தங் கைவருந்தக்

கூடிச் சிறியேம் இழைத்தசிற்றில்
குலையச் சிதைத்தல் நினைக்கடுமோ

செண்டு தரித்து மேருவென்ற
சீரே சிற்றில் சிதையேலே

தேவை நகருள் தேசுமிழும்
சேயே சிற்றில் சிதையேலே. (40)

தூய பனிநீ ராட்டிமுடி
துடைத்துச் சிறுசூ ழியமுடித்துத்
துகளின் மணியால் இழைகலன்கள்
சூட்டி முலைத்தீம் பாலூட்டி

மேய எமது மனத்திலின்னல்
விளைக்கக் கொடிமா ளிகையினங்கார்
வேலை வெளிறச் செயுமறுகில்
விடுத்த வரையே அன்றிமிகும்

தீய ததுவா நினைநோவல்
சிறியேம் நாங்கள் பேதைமையால்
செயுமித் தவருேர் தவறென்னுச்
சிந்தை யிருத்தேல் பிறவிவழுத்

தேய நினைவோர்க் கள்ளூறும்
தேனே சிற்றில் சிதையேலே
தேவை நகருள் தேசுமிழும்
சேயே சிற்றில் சிதையேலே.

(41)

# 9. சிறுபறைப் பருவம்

உந்துபகல் இரதப் பரிக்கயர்வு தவுதெங்கின்
ஒண்கனியை அரியுதிர்க்க
ஒளிமணி அலைத்தடத் தடவாளை வெருவிமேல்
ஓங்கிவெடி போய்மிக்கரிச்

சந்தனமு தற்றண் டலைக்கோ டொருங்கையுஞ்
சாடிவான் கங்கையினிருந்
தண்கரை உடைக்கஅது கீண்டொழுகு கின்றதூய்ச்
சலவாரி யோடுமலரின்

கந்தவண் டாதுறைந் தளறுபட அதனின்முக்
கடமழை யினைக்க லணையார்
கந்துகத் தெருளுமெதிர் பகைஞுருள் வையமும்
கவிழவூற் றுங்கதத்த

சிந்துரம் உவட்டறுக் குந்தெருத் தேவையிறை
சிறுபறை முழக்கியருளே
திங்களினை ஒத்தமுக நங்கையிரு வர்க்கரசு
சிறுபறை முழக்கியருளே. (42)

தார்மருவு மர்தர்நடு மெய்மிகவும் நோவ்அளி
சார்ந்துகண் வளருகுழலைத்

தண்மழை சுரக்கவரு சூற்கந் தரக்கணந்
தம்மினமி தென்றுமறுக

வார்மணி குயிற்றிமிளி ருங்குழைகள் மீதுதுளி
வாள்விழிக டாவப்பயிர்

வானுற வளர்ந்திலகு பூம்பணைகள் தடமண்டி
மன்கயலி னங்கள்மறுக

ஏர்மலரும் இவர்தனத் திற்குமறு கக்கழுத்
திற்குவெண் வளைகள்மறுக

எழிலொளி யுறுங்கனக வடமேரு என்றுபரி
ஏழ்பரிக் குந்தினகரன்

தேர்மறுகு பொற்கோ புரந்தழுவு தேவையன்
சிறுபறை முழக்கியருளே

திங்களினை ஒத்தமுக நங்கையிரு வர்க்கரசு
சிறுபறை முழக்கியருளே. (43)

கரதூ டணன்முத லாகிய சேனைக்
கடலொடு வெள்ளியெனும்
கைலைப் பெருவரை பேர்த்த நெடுந்திண்
கையிரு பத்துடையான்

அரனும் தானவ அணியும் அவன்தலை
அட்டபெ ருந்தகையும்
அம்புயம் ஆலய மாக்கொண் டுறைதரும்
அருமறை மொழிவோனும்

சுரரும் தனதவ ரிறையும் இறைஞ்சித்
துயர்தந் தனனெனவச்
சூரன் படிவமொ டுந்திணி யையுமினே
சுட்டி அறுப்பனென

முரசந் தனையறை விப்பன போல
முழக்குக சிறுபறையே
மூவுல கும்புகழ் தேவையில் வேல
முழக்குக சிறுபறையே (44)

வண்டசு ரக்கட லின்கலி யும்மன்
மதனமர் செய்யளழும்
வாகைப் பெருமுர் சம்பிளி றுஞ்சும்
மையுனின தடிமலரைக்

கண்டு வணங்குவர் தங்களை நோக்கிக்
காய வருஞ்சூலக்
காலன் தூதுவ ரின்கணம் ஆர்க்கும்
கலிப்பும் அடங்கவளத்

தண்டட நீள்கழ னிக்கரை தோறும்
சங்கினி னந்தரளந்
தரிசூ லதனில் வருந்தி முழங்கச்
சத்தசு ரங்களையும்

முண்டக வண்டுமு ழங்கவெ நீயும்
முழக்குக சிறுபறையே
மூவுல கும்புகழ் தேவையில் வேல
முழக்குக சிறுபறையே (45)

கயிலையி லுற்றப ரசிவமு தற்பெறு மருமகவே
கலைகணி ரம்பிய மதியமு கத்துமை விழிமணியே

குயிலைநி கர்த்திடு மினியமொ ழிக்குற மகளிறையே
குலவுகு ணக்கட லதனிலு தித்தவி ரவியொளியே

அயிலையெ டுத்தொரு சமரை முடித்திடு மெமதரசே
அவனி யிடத்துள உயிரை யளித்தருள் தனியமுதே

செயிரறு மற்பணை களினில வுற்பல மலியிசையார்
தேவையி லுத்தம சிறுவமு ழக்குக சிறுபறையே
(46)

# 10. சிறுதேர்ப் பருவம்

அகலாத வம்பெருகு பருமணிச் சுடிகைகொளும்
ஆயிரம் துத்திப்பணத்

தரவின் சிரங்கள்கிடு கிடெனக் கலங்கியுளம்
ஆடத்த ரங்கமோது

மகரால யங்களோ ரேழையும் இடைக்கிசைய
வனைதானை யாக்கொண்டபேர்

வையந் தனைக்கருது மனவேக மாகவொரு
மாத்திரையில் வலம்வந்தவிண்

புகராமு டுக்களின் கணமுதிர்த் திருளினைப்
பொருபக லவன்திங்களைப்

புயல்மறைத் தாலென மறைக்கும் கலாபம்விரி
பொற்பரிந டத்தித்தினம்

திகழ்பாக தேவைநகர் உறைகந்த குமரகுக
சிறுதேர் உருட்டியருளே!

தினகரர்கள் ஒருகோடி உதயமென ஒளிர்வேல
சிறுதேர் உருட்டியருளே! (47)

காரினம் அனைத்துமுள் ளத்தில் திரைக்கருங்
கடன்முழுதும் அந்தவடவை
கனல்மிக வுறுத்துப் பரந்துபுனல் முற்றும்
கவர்ந்தன நமக்குநல்லூண்

வாரில வெனத்துயர் அழுந்தவசு ரப்பெரும்
வண்டருட லங்கிழித்து
வழியும் புலால்மணம் கமழ்கின்ற செஞ்சோரி
வாரியில் கூளித்திரள்

சாரிமுழு கிக்குதித் திருகையால் அள்ளியும்
தாளியா மகடிரம்பத்
தனித்தனியெ வாய்வைத்து முண்டதின் மிதக்குமத்
தலைநெற்றி மூளையுணவோர்

தேரினை உருட்டிவரு தேவைநக ருறைமுருக
சிறுதேர் உருட்டியருளே
தினகரர்கள் ஒருகோடி உதயமென ஒளிர்வேல
சிறுதேர் உருட்டியருளே. (48)

ஆவனனி கொண்டொன்றும் இலையென இரப்பவர்க்
கருளுதவ மாதிரத்தின்
அகல்நெடுஞ் சிறையறுத் திட்டகுலி சக்கரத்
தாயிரம் கண்ணுற்றவிண்

காவலனி னுத்திரத் திற்கிறைஞ் சுங்கற்ப
கத்தருக் குலமென்றுபைங்
கதிருமிழும் வல்லிசா தக்கொடிகள் சுற்றவன்
காழரைப ருத்துவளரும்

காவலரு மம்மலரு ளூறுமினிய பண்செயறு
காலினமு ழக்கவுதிரும்
கமழ்கந்த வெண்பொடியொ டுந்தேனு மளவளாய்க்
கலுழியிது வென்னநிறையும்

தேவைநக ரின்னெடிய மறுகிலறு முககுழக
சிறுதேர் உருட்டியருளே
தினகரர்கள் ஒருகோடி யுதயமென ஒளிர்வேல
சிறுதேர் உருட்டியருளே (49)

மல்லலுறு பூந்தடத் துட்கமலம் ஏற்பவெண்

வளையெலா மணிகொடுக்கும்

வண்டினம் இரங்கியிசை செய்தேற்ப நறியசெழு

மலரெலாம் ஊண்கொடுக்கும்

அல்லியின் இனங்களெல் லாமேற்க வுங்கொன்றை

அள்ளியம் பொன்கொடுக்கும்

அகல்பணைகள் கமுகேற்க வுஞ்செந்நெ லாம்பைத்த

அணிதுகில் கொடுக்குமெனவே

சொல்லினவர் புகழையாம் அறையவொரு வாய்தகாத்

தொகையிலா வேண்டுமென்னத்

துதிதவத் துற்றுமே தோற்றனன் அநந்தனும்

தூயவிவ் வள்ளல்கள்கொடை

செல்லின நிகர்க்குமோ என்னுமந் தேவையிறை

சிறுதேர் உருட்டியருளே

தினகரர்கள் ஒருகோடி உதயமென ஒளிர்வேல

சிறுதேர் உருட்டியருளே (50)

கொழியலைகள் மோதுமொரு வடவடையின் மீதுசெறி
கோவளிப் போன்துயின்ற

குலவுபாற் கடலுமமு மறியேந்து கரதலக்
கொன்றையந் தொடைவேணியன்

உழியதெனும் வேதண்ட கிரியுமபி ராமிதன்
உறையுளும் கரியதாச்செய்

துறுதிசைக் களிறைவா னிறைமருள வெளிறுசெயும்
உயர்புகழ்த் தேவைவாழ்நல்

வழியக நினைந்துநின் பாதமல ரிணைகட்கு
வழிபடுந் தொண்டர்கட்கு

வான்தளவ நிகர்மூரல் அறுசுவை யறுத்துமெய்
வணிகர்முத லோரகத்தில்

செழியவிரு நிதிவளமும் மதலையும் பெருகநீ
சிறுதேர் உருட்டியருளே

தினகரர்கள் ஒருகோடி உதயமென ஒளிர்வேல
சிறுதேர் உருட்டியருளே. (51)



